


# புது நம்பிக்கை

பெறுவோம்! கொடுப்போம்!!

தனி பிரதி.ரூ. 10/-

மலர் – 2 ஜூலை – செப்டம்பர் – 2013 இதழ் – 3

## தேசமே பயப்படாதே; மகிழ்ந்து களிகூரு.

(யோவேல் 2:21)

# தொழுநோயாளிகளின் குழந்தைகள் இல்லம்

ஆந்திர மாநிலத்தில் இந்த இல்லம் 34 குழந்தைகளுடன் செயல்பட்டு வருகிறது. இவர்களின் பெற்றோர் தொழுநோயாளிகள் ஆனபடியினால் அவர்களால் வேலை செய்து இக்குழந்தைகளின் அடிப்படை தேவைகளான உணவு மற்றும் உடை போன்றவைகளை சந்திக்க இயலவில்லை. பள்ளிச் செல்லும் நாட்களில் மட்டும் இக்குழந்தைகளுக்கு பள்ளியில் மதிய உணவு வழங்கப்படுகிறது. ஆகவே இக்குழந்தைகள் காலையிலும் இரவிலும் உணவு கிடைக்காமல் பசியால் அல்லல் படுகின்றனர். இக்குழந்தைகளின் பரிதாப நிலையைக் கண்ட இக்கிராம மிஷனெரி மற்றும் சபையார் இக்குழந்தைகளுக்கு காலையிலும் இரவிலும் தங்களால் இயன்ற அளவு உணவு சமைத்து கொடுத்து உதவுகின்றனர். இருப்பினும் இந்த ஏழை சபையால் குழந்தைகளுக்கனா உணவு தேவைகளை தினமும் சந்திக்க இயலாமல் சிரமப்படுகின்றனர். இந்த ஏழை குழந்தைகளுக்காக உதவும் இந்த சபையுடன் இணைந்து நீங்களும் உதவலாம். இக்குழந்தைகளுக்காய் உங்கள் தனி, குழு, சபை மற்றும் குடும்ப ஜெபங்களில் ஜெபிக்க அன்புடன் வேண்டுகிறோம்.

ஒரு குழந்தைக்கான மாத உணவு தேவை ரூ. 500/–

இக்குழந்தைகளை சந்திக்க மற்றும் உதவ விரும்புபவர்கள் தொடர்பு கொள்ளவேண்டிய எண்: 9443155120



## மிஷனரிகளுக்கு மருத்துவ உதவி செய்தல்



மிஷனரி பணிக்களங்களில் பணியாற்றும் பணியாளர்கள் தேவ ராஜ்யத்தின் மகிமையான பணியை செய்து வருகின்றனர். அவ்வாறு பணியாற்றும்போது மிஷனரிகள் சந்திக்கும் இன்னல்கள், இடர்பாடுகள் ஏராளம் ஏராளம். இத்தனை இடர்களுடன் சில மிஷனரிகள் உடல் ஆரோக்கியம் சார்ந்த பல்வேறு நோய் நொடிகளுக்கு ஆளாகின்றனர். அவ்வித நோய்கள் தாக்கும்போது சில மிஷனரிகள் உரிய சிகிட்சைக்கான நிதி வசதியின்றி தவித்து வருகின்றனர்.

இவ்வித இக்கட்டான வேளைகளில் மிஷனரிகளின் சிறந்த மருத்துவ சிகிட்சைக்கு புதுநம்பிக்கை மிஷன் உதவி செய்து வருகிறது. ஏழை மிஷனரிகள் மருத்துவ சிகிட்சைக்கு கருத்துடன் ஜெபிப்போம். உதவ முன்வருவோம்.

மேலும் விபரங்களுக்கு தொடர்பு கொள்ள: 9442935233

Address:-
Newhope Mission
75/33, Isaac Street,
Nagercoil - 629001

# புது நம்பிக்கை

பெறுவோம்! கொடுப்போம்!!

மலர் - 2 ஜூலை -செப்டம்பர் - 2018 இதழ் - 3


## உள்ளே . . .




ஆசிரியர்

S. மோசகஸ் ராஜ் – 7502071054

ஆசிரியர் குழு

C. பால் பென்னட் சிங் –9442315512

ஆ. ரவி குமார் – 9442935233

S. வசந்த நேசம் – 9789183072

D.V. பிபின் சஜீவ் – 9443018392

A. சுதா ஏசாயா – 9486083188

முகவரி :

**புது நம்பிக்கை**

75/33, ஐசக் தெரு,

நாகர்கோவில் – 629 001



தனி பிரதி. 10/-

ஆண்டு சந்தா. 100/-

ஆயுள் சந்தா. 2000/-

தனி சுற்றுக்கு மட்டும்


**இயக்குநர் மடல்!**

*கிறிஸ்துவுக்குள் அன்பான புதுநம்பிக்கை குடும்பத்தினரே!*

தேவ கிருபையினாலும், உங்கள் அனைவரின் ஜெபம் மற்றும் உதாரத்துவமான காணிக்கைகளாலும் நமது ஊழியங்கள் சிறப்புடன் நடந்தேறி வருகிறது. தமிழகத்தின் சில பகுதிகளிலுள்ள பணிக்களங்களை பார்வையிட்டு, அங்கு பணிபுரிந்து வரும் மிஷனெரிகளுடன் பேசவும், உற்சாகப்படுத்தவும், தேவன் உதவி செய்தார்.

விடுமுறை வேதாகமப்பள்ளி மூலம் பல சபைகளிலும் குழந்தைகளுக்கு இயேசுவின் அன்பு பாடல், கதைகள் மூலம் எடுத்துரைக்கப்பட்டது. மேலும் சென்ற ஆண்டுக்கான வரவு செலவு தணிக்கை அறிக்கை நமது மிஷன் நிர்வாகக்குழு ஆண்டு கூட்டத்தில் பரிசீலிக்கப்பட்டு ஏற்கப்பட்டது. அடுத்த நிதி ஆண்டுக்கான ஊழிய திட்ட அறிக்கையும் ஏகமனதாக ஏற்கப்பட்டது. ஊழியத்தின் தேவைகள் அனைத்தையும் சந்திக்க உதவிய தேவனுக்கு எங்களோடு சேர்ந்து நன்றி செலுத்த உங்களைக் கேட்டுக்கொள்கிறோம்.

ஆந்திர மாநிலத்தில் சபை கட்டும் பணி தொடர்ந்து நடந்து வருகிறது. அத்துடன் தெலுங்கானா மாநிலத்தில் சகோ. தீமோத்தி அவர்கள் பணிக்களத்தில் கட்டப்பட்டுவரும் சபையின் தேவைகள் சந்திக்கப்பட ஜெபித்துக் கொள்ளுங்கள்.

தேவ கிருபையால்,

**சகோ. ஆ. ரவி குமார்**

# பிரச்சனைகளின் போது ....!

பிரச்சனைகள், சிக்கல்கள், வாழ்க்கை போராட்டம் – இவைகளில்லாத மனிதனே உலகில் இல்லை. ஏழை – பணக்காரன், ஆண்–பெண், சிறுவர்–பெரியவர், தொழிலாளி – முதலாளி, விசுவாசி – அவிசுவாசி என அனைத்து தரப்பினரும் தினமும், ஏன் வாழ்நாள் முழுவதுமே ஏதாவது ஒரு பிரச்சனையை சந்தித்துக் கொண்டிருக்கின்றனர். (பிரசங்கி 9:2) இவ்விதமாக பிரச்சனைகள் எழும் சூழ்நிலைகளில் அவைகளிலிருந்து விடுபடும் வழி தெரியாமல் அல்லல் படுவோர் ஏராளம், எராளம். சிலர் பிரச்சனைகளை கண்டவுடனே அவைகளை எதிர்கொள்ளும் துணிவு இல்லாமல் தங்களையே மாய்த்து விடுகின்றனர். தற்கொலை செய்து விடுகின்றனர். இன்னும் சிலர் பிரச்சனைகளை எதிர்கொள்ளும் திறன் இல்லாமல் மன அழுத்தங்களுக்கு ஆளாகின்றனர். இவ்வித வாழ்வியல் சூழல்களில் பிரச்சனைகளை எவ்வாறு எதிர்கொண்டு வாழ்வது? தேவனுடைய வார்த்தையான பைபிளில் மனிதன் தன் பிரச்சனைகளின் போது அவைகளை எப்படி கையாள்வது, வெற்றியடைவது என்பவை குறித்த பல நல்ல ஆலோசனைகள் கொடுக்கப்பட்டுள்ளன.

அவைகளில் சிலவற்றை மட்டும் ரோமர் 8–ஆம் அதிகாரத்தின் அடிப்படையில் சிந்திப்போம்.

**1. அப்பா என கூப்பிடு! (ரோ.8:14–16)**

ஆண்டவராகிய இயேசு கிறிஸ்து நமது பாவங்களுக்காக சிலுவையில் அடிக்கப்பட்டு, மரித்து, அடக்கம் பண்ணப்பட்டார். மூன்றாம் நாளில் உயிர்த்தெழுந்தார் (1கொரி.15:3–5; ரோம.10:9,10) இதனை விசுவாசிக்கிற அனைவரும் தங்கள் பாவங்கள் மன்னிக்கப்பட்டு தேவனுடைய பிள்ளையாக அங்கீகரிக்கப்படுகிறனர். (யோ.1:12) தேவனுடைய பிள்ளையாக இருப்பதே உலகில் நமக்குள்ள மாபெரும் பாக்கியம்.

தேவனுடைய பிள்ளையான நமக்கு பிரச்சனை வருமா? வரும்! உலகத்தில் உங்களுக்கு உபத்திரவம் உண்டு. ஆனாலும் திடன் கொள்ளுங்கள். (யோ.16:33) பிரச்சனை வரும்போது அதனை எதிர்கொள்ளும் திடன் பெறுவதற்கு ‘‘அப்பா பிதாவே’’ என உரிமையோடு கூப்பிட வேண்டும்!

அவன் என்னை நோக்கி கூப்பிடுவான். நான் அவனுக்கு மறு உத்தரவு அருளிச்செய்வேன்; ஆபத்தில் நானே அவனோடிருந்து அவனை தப்புவித்து, அவனை கனப்படுத்துவேன். (சங்.91:15)

நம்மை ஆபத்திலிருந்து தப்புவிக்க வல்லமையுள்ள பரலோக தகப்பனை நோக்கி அப்பா பிதாவே என கூப்பிடுகிறோமா?

**2. ஆவியானவரின் உதவி!** (ரோ.8:26)

நான் பிதாவை வேண்டிக்கொள்ளுவேன், அப்பொழுது என்றென்றைக்கும் உங்களுடனே கூட இருக்கும்படிக்குச் சத்திய ஆவியாகிய வேறொரு தேற்றரவாளனை அவர் உங்களுக்குத் தந்தருள்வார் (யோ.14:16), இயேசுகிறிஸ்துவை தங்கள் ஒரே இரட்சகராக ஏற்றுக்கொண்ட விசுவாசிகளுக்குள் ஆவியானவர் வாசம் செய்கிறார். அதுமட்டுமல்ல அவனுக்குள் அவர் நிரந்தரமாக என்றென்றைக்கும் வாசம் செய்து அவனுக்கு பிரச்சனைகள் வரும்போது அவனை வசனத்தால் தேற்றுகிறார்.

மேலும் விசுவாசிகள் தேவனுடைய சித்தம் அறிந்து ஜெபிக்க தவறி, ஆவிக்குரிய பலவீனத்தில் இருக்கும்போது, தேவ ஆவியானவர் வாக்குக்கடங்காத பெருமூச்சுடன் வேண்டுதல் செய்கிறார். ஆவியானவரின் இந்த ஜெபம் இயேசு கிறிஸ்து தனது சீடர்களுக்காக செய்த ஜெபத்தை ஒத்திருக்கிறது. ''நீர் அவர்களை தீமையினின்று காக்கும்படி வேண்டிக்கொள்ளுகிறேன்'' (யோ.17:15). பேதுருவின் விசுவாசம் ஒழிந்து போகாதபடிக்கு உனக்காக வேண்டிக்கொண்டேன் (லூக்.22:32). இவ்விதமாக நமது பிரச்சனைகளை நாம் எதிர்கொள்ளும் திறன் குறைந்திருக்கும்போது, நமக்கு தேவையான வல்லமைக்காக அவர் நமக்காக ஜெபித்து உதவி செய்கிறார்.

**3. ஆசீர்வாதமாக மாறும்!** (ரோமர் 8:28)

உலகத்தில் உள்ள எல்லா மனிதருக்கும் பிரச்சனைகள் வரும். ஆனால் விசுவாசிகளின் பிரச்சனைகளை அவர்களுக்கு ஆசீர்வாதமாக மாற்றும் வல்லமை தேவனுக்கு மட்டுமே உண்டு (1கொரி.10:13). தண்ணீரை திராட்சரசமாக மாற்றியவர் அவர். உங்கள் துக்கம் சந்தோசமாக மாறும் என்கிறார்! பிரச்சனைகளிலிருந்து நம்மை விடுவிக்கும்படி நம்மோடே இருக்கிறார். நான் உங்களை திக்கற்றவர்களாக விடேன். தேவனிடத்தில் அன்பு கூர்கிறவர்களுக்கு சகலமும் நன்மைக்கு ஏதுவாக நடக்கிறது.

இன்று உங்கள் வாழ்வில் எழும் பிரச்சனைகளை நினைத்து ஒருவேளை நீங்கள் சோர்ந்து போயிருக்கலாம். ஆனால் திடன் கொள்ளுங்கள். உலகத்தை ஜெயித்தவர் உங்களோடு இருக்கிறார். அப்பா பிதாவே என கூப்பிடுங்கள். வசனத்தால், ஜெபத்தால் ஆவியானவர் உங்களுக்கு உதவி செய்வார். உங்கள் பிரச்சனைகளை மாற்றி, அது உங்களுக்கு ஆசீர்வாதமாக மாற உதவி செய்வார்.யோசேப்பு எகிப்தில் அடிமையாக சென்றான். ஆனால் அவனது பிரச்சனைகளில் அவனுடன் இருந்த தேவன், அவனது அடிமைத்தனத்தை மாற்றி அவன் ஆளுகை செய்யும் தலைவனாக உயர்த்தி அவனை ஆசீர்வதித்தார். (ஆதி.45:4–8; சங்.105:17–22)

யோசேப்பை உயர்த்திய தேவன் உங்களோடிருக்கிறார். உங்கள் பிரச்சனைகளிலிருந்து விடுவித்து உங்களை உயர்த்துவார்!

# திரித்துவம்

பிதா, குமாரன், பரிசுத்த ஆவியானவராகிய திரியேக தேவனுக்கு, இன்றும் என்றும் உள்ள சதாகாலங்களிலும் மகிமை உண்டாவதாக. அவராலே உங்களுக்கு கிருபையும் சமாதானமும் உண்டாவதாக. நாம் கடந்த இதழிலே படைப்பைக் குறித்த பைபிளின் போதனையை அறிந்து கொண்டோம். இந்த இதழிலே, பைபிளின் அஸ்திபார போதனைகளில் ஒன்றாகிய திரித்துவத்தைக் குறித்து கற்றுக்கொள்ளவிருக்கிறோம்.

திரித்துவம் என்கிற பதமானது, ஒரே தேவன் ஒரே தன்மையுடையவராய் (Essence) அதே வேளையில் பிதா, குமாரன், பரிசுத்த ஆவியானவர் என்கிற மூன்று நபர்களாக (Persons) சதாகாலமும் செயலாற்றுவதைக் குறித்த பைபிள் உபதேசமாகும். திரித்துவம் என்கிற பதம் பைபிளில் நேரடியாக காணப்படவில்லையென்றாலும் திரித்துவத்தைக் குறித்த போதனை பைபிள் முழுவதுமாய் தெளிவாக காணப்படுகிறது. உதா. பைபிள் என்கிற பதம் பைபிளில் எங்குமே காணப்படவில்லை. எனினும், பைபின் என்னும் பதம் வேதத்தின் முக்கியத்துவத்தை நமக்கு தெளிவாக காட்டுகிறது. அதுபோல பைபிளிலே திரித்துவம் என்கிற பதத்திற்கு இணையான பதமாகிய தேவத்துவம் என்கிற பதம் காணப்படுகிறது. **(கொலோ.2:9)**

தேவன் திரித்துவமாயிருக்கிறார் என்கிற போதனையானது கிறிஸ்து மார்க்கத்திற்கே உரியதாகும். வேறு எந்த மதங்களிலும் இந்த உயரிய போதனை கிடையாது. இந்து மதம், எகிப்திய மதம் போன்ற மதங்களில் திருமூர்த்திகள் அதாவது மூன்று கடவுள்கள் காணப்படுகின்றனர். ஆனால் அது பைபிள் கூறும் திரித்துவமல்ல. யூத மற்றும் இஸ்லாம் மதங்களில் ஒரு கடவுள்கொள்கை காணப்பட்டாலும் அது திரித்துவமல்ல. மற்ற மதங்களில் மனிதனின் கடவுளைக் குறித்த தேடலையும், போதனைகளையும் பார்க்கிறோம். ஆனால் **66** புத்தகங்கள் அடங்கிய பைபிளிலே, தேவன் தம்மைக்குறித்து வெளிப்படுத்தியுள்ளவைகளைக் கொண்டு திரித்துவத்தைக் குறித்து அறிகிறோம். ஆனாலும் மறைவானவைகள் கர்த்தருக்கே உரியவைகள் **(உபா.29:29).** மட்டுமல்ல, நம்முடைய சரீர உயிர்த்தெழுதலுக்கு பிறகே இன்னும் இதற்கு அப்பாற்பட்ட காரியங்களை நாம் அறிய முடியும். ஆனால், தேவன் தம்மைக்குறித்து பைபிளில் வெளிப்படுத்தியுள்ளவைகளை மறுதலிப்பது பெரிய பாவமாகும்.

### 01. தன்மையும் நபர்களும்

கிறிஸ்தவ இறையியலின்படியும் பைபிளின் போதனையின் அடிப்படையிலும் தேவன் ஒருவரே என்றும், ஆனால் நபர்களில் மூன்று நபர்களாக இருக்கிறார் என்றும் பார்த்தோம். இப்போது இறை தன்மை மற்றும் ஆளுமை நபர்களைக் குறித்த விளக்கத்தை நாம் அறிய வேண்டும்.

**தேவ தன்மை** என்பது தேவனுக்குள் அடங்கியுள்ளவற்றைக் குறிப்பதாகும். அவருக்குள் அடங்கியுள்ளவைகள் தெய்வீகமும் தெய்வீக குணாதிசயங்களுமே (Divine Attributes) ஆகும். இவைகளால் தேவன் உருவாகவில்லை. மாறாக அவரிடத்தில் தெய்வீகமே முழுமையாக காணப்படுகிறது. தேவன் ஆவியாயிருக்கிறார் (யோ.4:24)

**தேவ ஆளுமைகள்** என்பது இந்த ஒரே தெய்வீக தன்மையுடைய தேவன் பிதா, குமாரன், பரிசுத்த ஆவியானவர் என்கிற மூன்று ஆள்தத்துவங்களாக செயலாற்றுவதைக் குறிப்பதாகும். தேவன் மூன்று நபர்களாக இருப்பதால் கிரியைகளில் வித்தியாசப்படுகிறார். ஆனால் இந்த மூன்று நபர்களும் ஒரே தெய்வீக தன்மை (Essence) கொண்டுள்ளதால் அவர்களின் சிந்தனை, மகிமை, அன்பு, வல்லமை ஆகியவற்றில் இணையாக மற்றும் இணைப்பாக காணப்படுகின்றனர்.

### 02. ஒரே தேவன்– மூன்று நபர்கள்

தேவத்துவத்தைக் குறித்து நாம் அறிந்து கொள்ள வேண்டிய முக்கிமான மூன்று காரியங்கள் உண்டு. அவையாவன,

i) தேவன் மூன்று நபர்களாக இருக்கிறார்

ii) ஒவ்வொரு நபரும் முழுமையான தேவனாக இருக்கிறார்

iii) தேவன் ஒருவரே

மேற்கூறிய இந்த மூன்று காரியங்களின் அடிப்படையில் நாம் தேவனைப் பார்க்காவிட்டால், நாம் தேவனுடைய ஆள்தத்துவம் மற்றும் செயலைக் குறித்த தவறான போதனைக்குள் சென்றுவிடுவோம்.

### 03. தேவத்துவத்தின் மூன்று நபர்களும் முழுமையான தேவனாக இருக்கிறார்கள்

ஒரே தேவன் பிதா, குமாரன், பரிசுத்த ஆவியானவர் என்கிற மூன்று நபர்களாக முழுமையான தேவனாக சதாகாலமும் இருக்கிறார்.

பிதா முழுமையான தேவன் – பிலி.1:2; யோ.6:27; ரோ.1:3; 1பேது.1:2

இயேசு கிறிஸ்து முழுமையான தேவன் – யோ.1:1,14; ரோ.9:5; கொலோ.2:9; எபி. 1:8; 1யோ.5:20.

பரிசுத்த ஆவியானவர் முழுமையான தேவன் – அப்.5:3,4; 2கொரி.3:17

### 04. தேவன் மூன்று நபர்களாக இருக்கிறார்

(எ.கா)ஆதி.1:1,26; 3:22; 11:7; ஏசா.6:8; 48:16; 61:1; மத்.3:16,17; 28:19; 2கொரி.13:14

ஆதி.1:1ல் தேவனுக்கு எபிரேய பன்மை பெயர்ச்சொல்லாகிய

ஏலோகீம் (Elohim) பயன்படுத்தப்பட்டுள்ளது. ஆதி.1:26; 3:22; 11:7 மற்றும் ஏசா.6:8ல் தேவன் தமக்குள்ளேயே "நாம்" என்கிற பன்மை பிரதி பெயரை பயன்படுத்துகிறார். ஏசாயா 48:16 மற்றும் 61:1ல் குமாரன், பிதா மற்றும் பரிசுத்த ஆவியானவரிடம் பேசுகிறார். (பார்க்க ஏசா61:1 மற்றும் லூக்.4:14–19) மத்.3:16,17ல் மனிதர் அறிகிற வகையில் இயேசு ஞானஸ்நானம் பெற்ற போது திரிதுவத்தின் மூன்று நபர்களும் பிரத்தியட்சமாக வெளிப்பட்டனர்.

மத்.28:19 மற்றும் 2 கொரி.13:14 தேவன் மூன்று நபர்களாயிருக்கிறார் என்பதற்கான மற்றொரு ஆதாரம் ஆகும். இதன்முலம் நாம் அறிவது

பிதா – குமாரனும், பரிசுத்த ஆவியும் அல்ல.
குமாரன் – பிதாவும், பரிசுத்த ஆவியும் அல்ல.
பரிசுத்த ஆவியானவர் – பிதாவும், குமாரனும் அல்ல.

ஆனால்,

பிதாவுக்குள் – குமாரனும், பரிசுத்த ஆவியானவரும்.
குமாரனுக்குள் – பிதாவும், பரிசுத்த ஆவியானவரும்.
பரிசுத்த ஆவியானவருக்குள் – பிதாவும், குமாரனும் உள்ளனர்.
(யோ.4:20–23)

இம்மூன்று நபர்களுக்குள் சகல தெய்வீக குணாதிசயங்களும் அடங்கியுள்ளது.

## 05. தேவன் ஒருவரே

தேவன் சதாகாலங்களிலும் மூன்று நபர்களாயிருந்தாலும் தேவன் ஒருவரே. அவர் தம்மில் தாமே இருப்பவரும், மாறாதவருமாயிருக்கிறார். தேவன் ஒருவரே என கூறும்போது அது அவரது ஆளுமைத்தன்மை மற்றும் தெய்வீகத்தன்மையை (Ontological Trinity) குறிக்கிறது. கிறிஸ்தவர்கள் மூன்று கடவுள்களை வணங்குகிறார்கள் என சிலர் அறியாமல் குற்றஞ்சாட்டுகின்றனர். நாம் மூன்று கடவுள்களை வணங்கவில்லை. முன்று கடவுள்களை வணங்குவது பாவமாகும். (யாத்.20) ஆனால் ஆள்தத்துவத்தில் மூன்றும் தன்மையில் ஒருவருமாயிருக்கிறவரை வணங்குகிறோம்.

தேவன் ஒருவரே என்பதற்கான ஆதார வசனங்கள்

உபா.6:4; 1கொரி.8:4; கலா.3:20; 1தீமோ.2:5

## 06. தேவத்துவத்தைக் குறித்த தவறான போதனைகள்

பைபிளில் சொல்லப்பட்டிருக்கும் திரித்துவ போதனைக்கு எதிராக சரித்திரத்தில் தேவத்துவத்தைக் குறித்த தவறான போதனைகள் எழும்பியுள்ளன. அவையாவன,

Monarchianism – ஒரே தேவன், ஒரே நபர் என்ற தவறான உபதேசம். கிறிஸ்தவத்தைத் தவிர்த்த ஒரே கடவுட்கொள்கை மதங்கள்(இஸ்லாம்)

Modalism – ஒரே தேவன், ஒரே நபர். அவர் காலத்திற்கு எற்றாற்போல் பிதாவாகவும், குமாரனாகவும், ஆவியானவராகவும் வெளிப்படுவார் என்ற தவறான கொள்கை. உதா. இன்றைய இயேசுவின் நாமம் மட்டுமே உபதேசம்
Arianism – குமாரன் பிதாவினால் படைக்கப்பட்டார் என்ற தவறான கொள்கை உதா.இன்றைய யெகோவா சாட்சிகள்
Tritheism – மூன்று கடவுள்கள் அல்லது மும்மூர்த்திகள் என்ற தவறான கொள்கை. இன்றைய பல மதங்கள்

**07. தேவன் திரித்துவமாயிருக்க வேண்டுவதன் காரணம்**

தேவன் ஏன் திரித்துவமாயிருக்க வேண்டும் என்பதற்கான எல்லா காரணங்களையும் நாம் அறிய முடியாது. ஏனென்றால் நாம் தெய்வீகமானவர்கள் அல்ல. மட்டுமல்ல மறைவானவைகள் கர்த்தருடையவைகள். ஆனால் பைபிளிலிருந்து இதற்கான இரண்டு காரணங்களை பார்க்க முடியும்.

முதலாவது, தேவன் தேவனாயிருக்க வேண்டும் என்றால் அவரால் ஒரே நபராய் மட்டுமே இருக்க சாத்தியமில்லை. உதாரணத்திற்கு தேவன் அன்பாயிருக்கிறார். ஆனால் ஒரே நபராயிருந்தால் அவர் யாரையும் சாராமல் அன்பை செயல்படுத்த முடியாது. ஆனால் காலம் துவங்குமுன்பே தேவன் திரியேகமாயிருப்பதால் அன்பாகவே இருக்கிறார் (யோ. 17:4,5; யோ.4:8)

இரண்டாவது, நம்முடைய இரட்சிப்பு. தேவன் ஒரு நபராயிருந்தால் தேவன் தன்னுடைய நீதியையும் அன்பையும் செயல்படுத்தியிருக்க முடியாது. அவரே நியாயந்தீர்க்கிறவராகவும் இரட்சிக்கிறவராகவும் இருக்க முடியாது. ஆனால் அவர் திரித்துவமாயிருப்பதால்

பிதா – இரட்சிப்பை திட்டமிட்டார்
குமாரன் – சரித்திரத்தில் இரட்சிப்பை நிறைவேற்றினார்
ஆவியானவர் – நம் வாழ்வில் இரட்சிப்பை செலாற்றுகிறார்.

இவ்விதமாக, மனுக்குலத்தின் இரட்சிப்பில் தங்கள் தங்கள் பங்களிப்பை திரியேகமாக செயல்பட்டு (Co-ordinative Trinity/ Economic Trinity) இரட்சிப்பை செயல்படுத்துகிறார்கள்.

திரித்துவம் மிகவும் முக்கியமானது. ஏனென்றால் தேவன் மிகவும் முக்கியமானவர். அவரை சரியாய் அறிந்துகொள்வது அவரை கனப்படுத்துவதாகும். மட்டுமல்ல அவரை ஆவியோடும் உண்மையோடும் தொழுதுகொள்ளவேண்டும். (யோ.4:24) அவர் யாரென்றே தெரியாதோர் இதைச் செய்ய முடியாது. மட்டுமல்ல ஜெபத்திலும் திரித்துவம் முக்கியமாகும். நாம் பிதாவிடத்தில் இயேசு வழியாய் பரிசுத்த ஆவியில் ஜெபிக்க வேண்டும். (எபே.2:18)

திரியேக தேவனின் தன்மையையும், அன்பையும் செயலையும் அறிவோம், போற்றுவோம், பறைசாற்றுவோம், மகிமையிலே அவரை சந்திப்போம். திரியேக தேவன் உங்களோடே கூட இருப்பாராக. 2கொரி.13:14

**–S. மோசஸ் ராஜ்**

# ஆளப்பிறந்தவன் வளர தேவையானது ?

அண்ணே ! வணக்கம் !

அபிஷேகிக்கப்பட்டவன் என்றால் ஆளப்பிறந்தவன் என எளிய தமிழ்பதத்தில் சென்றமுறை சொன்னீர்கள். அதை சற்று விரிவாக சொல்லுங்கள்.

அபிஷேகிக்கப்பட்டவன் எப்படி ஆள்பவனாக மாற முடியும் ? அதாவது நாட்டை ஆள்பவனாக மாற முடியும் !!

நன்றாக கேட்டாய் தம்பி ! எப்படி நாட்டை ஆள்பவனாக மாறமுடியும் என சொல்லுகிறேன் !

உலகத் தலைவர்களின் வாழ்க்கை சரித்திரத்தை படித்திருக்கிறாயா ?

படிச்சிருக்கேன். காந்தி, அண்ணா மற்றும் சில மிஷனெரிகள் வாழ்க்கை சரித்திரம் இதெல்லாம் படித்திருக்கிறேன். ஜெயலலிதா, அம்பேத்கார், நேரு இவர்கள் வாழ்க்கை சரித்திரம் கூட படித்திருக்கேன்.

நல்லது ! இவர்கள் வாழ்க்கை வரலாற்றிலிருந்து என்ன கற்றாய் ? இவர்களெல்லாம் தலைவர்களாக வளரும் முன்பு என்ன செய்தார்கள் தெரியுமா ?

தெரியும். அவர்கள் எல்லோரும் சிறு வயதிலிருந்தே புத்தகங்கள் அதிகம் வாசித்தார்கள் !

அற்புதமாக சொன்னாய் ! அவர்கள் எல்லோருமே வாசிக்கும் பழக்கத்தை சிறு வயதிலேயே கொண்டிருந்தார்கள் ! அது மட்டுமல்ல இவர்களுக்கெல்லாம் வாசிக்கும் பழக்கத்தில் முன்னோடி யார் தெரியுமா ?

நீங்க சொன்னாத்தானே தெரியும் !

அப். பவுல். அவர்தான் தனது மரணத்தின் சில நாட்கள் முன்பு வரை படித்துக்கொண்டிருந்தார். (2தீமோ.4:13) அதுமட்டுமல்ல. தனது உடன் ஊழியக்காரர்களையும் வசனத்தை வாசிக்க பவுல் உற்சாகப்படுத்தினார் (1தீமோ.4:13)

பவுலின் வாழ்க்கையை வேதாகமத்திலிருந்து கற்ற கிறிஸ்தவ மிஷனெரிகள் தாங்கள் இந்தியா வந்தபோது இந்திய மக்களிடம்

கல்வியையும், வாசிக்கும் பழக்கத்தையும் ஊட்டினர். மிஷனெரிகளிடமிருந்து வாசிக்கும் பழக்கத்தை கற்ற இந்திய அரசியல் தலைவர்களும் தங்கள் வாசிக்கும் பழக்கத்தை வளர்த்துக் கொண்டார்கள். ஆகவே பிற்காலத்தில் இந்திய தேச தலைவர்களாக வந்தார்கள். அதுபோல நீயும் வாசிக்கும் பழக்கத்தை இப்போதே வளர்த்துக் கொண்டால், எதிர்காலத்தில் உயர் பதவிகளுக்கு செல்ல முடியும்! வாசித்தால் மட்டுமே வளர்வாய், உயர்வாய்!

நிச்சயமாக, நான் வாசிக்கும் பழக்கத்தை வளர்த்துக் கொள்வேன்.

அப்படி செய்தால் கர்த்தர் உன்னை நிச்சயம் உயர்த்துவார்!

அண்ணே! ஒரு சந்தேகம் கேட்கட்டுமா? வாசித்தால் மட்டும் தலைவனாகிவிட முடியுமா?

நல்ல கேள்வி! அடுத்தமுறை சந்திக்கும்போது பதில் சொல்கிறேன்.

(தொடரும்)

**– எச்.ஆர்.கே**

---

## பாடல் மற்றும் ஆவிக்குரிய புத்தகம்




சபை ஆராதனை, வீட்டு ஜெபக்கூட்டம், தனி ஜெபத்தில் தேவனை பாடி துதிக்க பக்தி பரவசம், இனிமையான பாடல்களின் தொகுப்பு. 500–க்கும் மேற்பட்ட பழைய, புதிய பாடல்கள் மலையாள, ஆங்கில பாடல்களும் உண்டு. பாடல் புத்தகத்தின் விலை ரூ. 70/–

**எமது இதர வெளியீடுகள்**

யூத பண்பாடும் வசன விளக்கமும் – ரூ. 30/–
சபை உடைதலை தடுக்கும் வழிகள் – ரூ. 120/–
சபை நிதி பெருகும் வழிகள் – ரூ. 70/–
குறிப்பு:– அனைத்து கிறிஸ்தவ புத்தக நிலையங்களிலும் கிடைக்கும்
தொடர்பு எண்: **9442935233**

# சுவிசேஷத்தின் பங்காளி பிரிஸ்கில்லா

ஆக்கில்லா பொந்து தேசத்தை சேர்ந்த ஒரு குடிபெயர்ந்த யூதர். பிரிஸ்கில்லா (அர்த்தம்: தகுதியான) ஒரு ரோமப் பெண்மணி. இவர்கள் இத்தாலி தேசத்தில் வாழ்ந்து வந்தார்கள். (அப்போஸ்தலர் 18) பவுல் அப்போஸ்தலன், இவர்களை தமது 2–வது மிஷனெறிப் பயணத்தின்போது கொரிந்துவில் சந்தித்தார். பவுல் அவர்களோடு தங்கி இருந்து, கூடாரம் செய்யும் தொழிலையும், மீதி நேரத்தில் சுவிசேஷப் பணியும் செய்தார்.

ஆக்கில்லாவும், பிரிஸ்கில்லாவும் தாங்கள் வைக்கப்பட்ட சூழ்நிலையிலேயே தேவனுக்கு ஊழியம் செய்தார்கள். ஆக்கில்லா குடும்பம் பவுலை ஏற்றுக் கொண்டது. விருந்தோம்பல் மூலம் சுவிசேஷ விருந்தை மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்ள முடியும். ஆம். பிரிஸ்கில்லாவின் விருந்தோம்பல் பலத்த சாதனைகைளை செய்தது. பிரிஸ்கில்லா குடும்பம் எப்படியெல்லாம் பவுலுக்கு உதவியாயிருந்தார்கள் என பவுல் சாட்சி கூறுகிறார். (ரோமர்16:3,4)

கிறிஸ்து இயேசுவுக்குள் என் உடன் வேலையாட்களாகிய பிரிஸ்கில்லாளையும் ஆக்கிலாவையும் வாழ்த்துங்கள். அவர்கள் என் பிராணனுக்காகத் தங்கள் கழுத்தைக் கொடுத்தவர்கள். அவர்களைப் பற்றி நான் மாத்திரமல்ல, புறஜாதியாரில் உண்டான சபையாரெல்லாம் நன்றியறிதல்லுள்ளவர்களாயிருக்கிறார்கள் என்றார், இவர்கள் குடும்பம் மக்கள் கிறிஸ்துவில் வளரவும் உறுதுணையாயிருந்தார்கள்.

ஆக்கில்லா பிரிஸ்கில்லா குடும்பமாக எபேசுவுக்கு பவுலுடன் வந்தார்கள். பவுல் அவர்களை எபேசுவில் விட்டுவிட்டு வேறு இடங்களுக்கு போனார். அவர்கள் அங்குள்ள ஜெப ஆலயத்திற்கு வந்த போது அப்பொல்லோ என்னும் வேதாகமங்களில் தேறின ஒரு சாதுரியவானைக் கண்டார்கள். வாக்கு வல்லமை மிக்க அவரது சொற்பொழிவில் ஒரு முழுமை இல்லாத தன்மை காணப்பட்டது. அதனை புரிந்து கொண்ட தம்பதியினர் தேவகுமாரனாகிய இயேசுகிறிஸ்துவின் பூரண வெளிப்பாட்டை அவனுக்கு தெளிவாக விவரித்து கூறினர். பழைய ஏற்பாட்டின் நிழலுருவத்தின்படி பிரசங்கித்துக்கொண்டிருந்தவனை புதிய ஏற்பாட்டின் நிஜத்துக்கு

கொண்டு வந்தனர். அதன் விளைவாக அவன் தனது வாழ்வில் மாற்றம் பெற்றதுமன்றி தனது வார்த்தையால் பலரது வாழ்வில் மாற்றம் வரச் செய்தான். பவுல் நட்ட கொரிந்து சபையை இவர் நீர் பாய்ச்சினார். தேவன் தமது கிருபையாகிய ஒளியையும், காற்றையும் வீசச்செய்து (1கொரி.3:6) நல்ல விளைச்சலை கட்டளையிட இவரது செயலும் ஒரு காரணமாயிற்று. அழிக்கிறவன் என்னும் அர்த்தம் கொள்ளும் அப்பொல்லோவை, சாத்தானின் கோட்டைகளை தகர்த்து அழிக்கும் தேவ வார்த்தையால், தேவ ராஜ்யத்தை கட்டும் பணியில் ஈடுபடுத்தியது இந்த விசுவாசக் குடும்பமே (தீத்து3:13). இவர்கள் சரியான அடிப்படையுடன் வேதத்தைக் கற்றுக்கொண்டதால் பிரசங்கித்த அப்பொல்லோவை விட அதிக ஞானமுடன் விளங்கினர். அந்த வெளிச்சத்தை அப்பொல்லோ தன் வாழ்வில் பெற்றதால் சரித்திரத்தின் பக்கங்களில் எழுதப்படும் அளவு ஊழியங்கள் இன்னும் வளர்ந்தேறின. இவன் வெளிச்சபை ஊழியங்களுக்குச் சென்றபோது அறிமுகக் கடிதம் கொடுத்து இந்த தம்பதியினர் ஊக்குவித்தனர்.

சகோதரிகளான நமது வேத அறிவு எப்படி? அப்பொல்லோக்களை எழுப்ப அத்தியாவசியமான காலம் இது. இதற்கு அத்தியாவசியமான வேத மகத்துவங்களை அறியும் வாய்ப்பு எல்லோருக்கும் கிடைக்க வேண்டும். நாமும் பிரிஸ்கில்லாவைப் போல வேத அறிவு பெற்று ஊழியங்களையும், ஊழியர்களையும் எழுப்ப முன்வருவோமாக.

**– சகோதரி. சகாயராணி ஹென்சிலின்**

---



## மருத்துவ குறிப்பு
## கொய்யாப் பழம்

இது ஒரு குறுந்தாரவப்பழம். இந்தியாவின் அனைத்துப் பகுதிகளிலும் பரவலாக விளைகிறது. இதில் பல வகைகள் உண்டு. கால்சியம் (30மி.கி.) பாஸ்பரஸ் (66மி.கி.) பொட்டாசியம் (68மி.கி.) இரும்பு (0.43மி.கி) என்ற அளவில் தாது சத்துக்கள் நிரம்பியுள்ளன. இப்பழத்தை தொடர்ந்து சாப்பிட்டு வந்தால் இரத்த கொதிப்பு நோய் கட்டுப்பாட்டுக்குள் இருக்கும். இதய நோய் மற்றும் நீரிழிவு நோய் உள்ளவர்கள் இப்பழத்தை தினமும் ஒரு துண்டாவது சாப்பிடுவது நல்லது. மலச்சிக்கலை தடுக்கும் ஆற்றல் இப்பழத்துக்கு உண்டு.

**–எச்.ஆர்.கே.**

## நன்கொடை அனுப்புவோர் கவனத்திற்கு

நன்கொடை மற்றும் காணிக்கை அனுப்புவோரும், வங்கியில் காணிக்கை செலுத்துவோரும் தயவு செய்து தங்கள் பெயர் மற்றும் முழு முகவரியை எமக்கு தெரிவிக்கவும். உரிய ரசீது கொடுக்க அது உதவிகரமாக அமையும். தங்கள் உதவிக்கும் ஒத்துழைப்புக்கும் நன்றி.

**பெயர் :** Newhope Mission (நியூஹோப் மிஷன்)
**எமது வங்கி கணக்கு எண் : 2113 01000 20536**
**வங்கி : தி பெடரல் பேங்க் லிட்** (The Federal Bank Ltd.)
**கிளை : பாலூர்** (Paloor)
IFSC Code : FDRL 0002113

நமது மிஷன் பணிக்களங்களை நேரில் பார்வையிட்டு ஜெபிக்க உங்களை அன்புடன் அழைக்கிறோம்.
தொடர்பு எண் : **9443155120** & **9442935233**

## பணிக்கள சந்திப்பு

நமது மிஷனெரி பணிக்களங்களில் நடைபெறும் பணிகளை நேரடியாக பார்வையிட்டு அங்கு பணிபுரியும் மிஷன் பணியாளர்கள் மற்றும் அவர்கள் குடும்பத்தினரை சந்திக்கவும் விருப்பமுடையவர்களாய் இருக்கிறீர்களா ? அப்படியானால் உங்கள் விருப்பத்திற்கு உறுதுணையாக நாங்கள் இருக்கின்றோம். நமது குழுவினர் வடஇந்திய மிஷனெரி பணிகளை பார்வையிட செல்லும்போது நீங்களும் எங்களுடன் இணைந்து கொள்ளலாம். உங்கள் வருகை வட இந்தியாவில் உள்ள புதிய கிறிஸ்தவ நண்பர்கள் யாவரையும் உற்சாகப்படுத்துவதாக அமையும். பணிக்களங்களை நேரில் சந்திக்க விரும்புவோர் தொடர்பு கொள்ளவும்.

**குறிப்பு:**

ஆயுள்சந்தா ரூ.2000/- செலுத்துபவர்களுக்கு புது நம்பிக்கை வெளியீடுகள் அனைத்தும் இலவசமாக அனுப்பித் தரப்படும்.

ஏப்ரல் - ஜுன்-2018 இதழ் போட்டிக்கான சரியான விடை எழுதியவர்கள்

**1. Mrs. ஸ்டெல்லா அலெக்ஸ்,**
**2. Mrs. பாக்கியம் குமார்,**
**3. Mrs. செல்வி செல்வராஜ்,**
**4. மாஸ்டர், ரெனில்,**
**5. Mrs. பொன்னேசம் ராஜா,**
**6. Mrs. பமிலா எட்வின்,**
**7. Mrs. லைலா பென்னட்,**
**8. Mrs. பிரசன்னா ஆல்பிரட்**
**9. Mrs. சந்திரமதி ராஜா,**
**10. Mrs. ஷீபா மோகன்,**
**11. Mrs. பியூலா ஜான்சன்,**
**12. Mrs. லின்சி யூஜின்.**

“இடைவிடாமல் ஜெபம் பண்ணுங்கள் ....” (1 தெச.5:17)

# ஜெப விண்ணப்ப குறிப்புகள்

☞ ஆந்திர மாநிலத்தில் கட்டப்பட்டு வரும் சபையின் தேவைகள் சந்திக்கப்பட ஜெபிப்போம்.

☞ தெலுங்கானா மாநிலத்தின், ஐதராபாத்தில் தீமோத்தி அவர்கள் பணிக்களத்தில் கட்டப்பட்டு வரும சபை மேற்கூரை காங்கிரீட் இட்டபின் நிதி இல்லாமல் நிறுத்தப்பட்டுள்ளது. தொடர்ந்து கட்டப்பட தேவையான நிதிக்காக ஜெபியுங்கள்.

☞ சகோ. ரமேஷ் அவர்களின் தொழிலில் வரவேண்டிய சம்பள பாக்கிகள் தடைகள் நீங்கி கிடைக்க ஜெபியுங்கள்.

☞ இந்த ஆண்டுஇறையியல் படிக்க செல்லும் மிஷனெரிகளுக்காக ஜெபிப்போம்.

☞ கடன் பிரச்சனையில் இருக்கும் சகோதரி. செல்வி அவர்களின் கடன்கள் நீங்கும்படி ஜெபிப்போம்.

---

# வேதாகம வினா – விடை போட்டி – 2018

வேதாகம பகுதி : – **ஆதியாகமம் – யாத்திராகமம்**

1. மிருக ஜீவன்களை தேவன் எதினால் உருவாக்கினார் ?
2. வாய்பிறப்பு என்ற சொற்றொடர் எந்த வசனத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது ?
3. பார்வோன் யோசேப்பின் குடும்பத்தை எங்கு குடியமர்த்தினான் ?
4. யாக்கோபின் ஆயுசு நாட்கள் எத்தனை வருடங்கள் ?
5. ஈசாக்கு வெட்டிய துரவுகளின் பெயர்கள் எவை ?
6. கல்மழை இல்லாத நாடு எது ?
7. எகிப்தில் இஸ்ரவேலர் அடிமையாக இருந்த ஆண்டுகள் எத்தனை ?
8. ஒரு ஓமர் என்பது எத்தனை எப்பாகள் அளவு ?
9. யாத்திராகமம் புத்தகத்தில் வட்டி, வாடகை, பரிசம் என்ற வார்த்தைகள் எங்கு குறிப்பிடப்பட்டுள்ளது ?
10. கிருபாசனம் எத்தகைய உலோகத்தால் செய்யப்பட வேண்டும் ?

**விடைகளை அனுப்ப வேண்டிய முகவரி**
**S. Vasantha Nesam,** 23- Eastaff Street, Nagercoil - 629 001
Cell : 9789183072

விடைகள் வந்துசேர வேண்டிய கடைசி நாள் : **செப்டம்பர் 15, 2018**

# தேவ ஊழியன் - நல்ல போர்வீரன்! 2 தீமோ. 2:3

பல உருவகங்கள் மூலம் தேவனுடைய வார்த்தையான பைபிளில் கிறிஸ்தவ விசுவாசியின் வாழ்வில் இருக்க வேண்டிய குணங்கள் விளக்கப்பட்டுளளன. குறிப்பாக அப். பவுல் சிற்பாசாரி, விவசாயி, விளையாட்டு வீரர் மற்றும் படைவீரர் முதலிய உருவகங்கள் வழியாக கிறிஸ்தவ பணியாளர்களிடம் இருக்க வேண்டிய பண்புகளை சித்தரித்துள்ளார். அதிலும் சிறப்பாக கிறிஸ்தவ பணியாளர்களை படைவீரர்களுடன் ஒப்பிட்டு கூறியுள்ளார்.

ஒருவர் சிறந்த படைவீரனாக விளங்க வேண்டுமெனில், அவர் கீழ்கண்ட பண்புகளை கொண்டிருக்க வேண்டும். இங்கு கொடுக்கப்பட்டுள்ள பதினைந்து பண்புகளும் ஒவ்வொரு படை வீரனிடமும் கட்டாயமாக இருக்க வேண்டும். அப்போது அவர் சிறந்த போர்வீரராக திகழ்வார்.

1. **பரீட்சை** (Test) – 1 தீமோ. 3:10 = தகுதிகள்
   முதல் தகுதி – இரட்சிப்பு –ரோமர் 10:9,10
   கூடுதல் தகுதி – 2 கொரி. 3:5; 1 தீமோ. 3:1–8

2. **அழைப்பு** – பரிசுத்த அழைப்பு – 2 தீமோ. 1:9
   பரம அழைப்பு – பிலி.3:14
   மாறாத அழைப்பு – ரோமர் 11:29

3. **பயிற்சி** – ஆயுத பயிற்சி – எபே.6:17
   களப் பயிற்சி – எபே. 6:12
   – வானம் – தானி 10:13
   – மனம் – ரோமர் 12:1,2

4. **துன்பம் சகித்தல்** – 2 தீமோ. 4:5; 2 கொரி.12:10

5. **ஒன்றிணைந்து செயல்படுதல்** – Unified action of Armed forces
   – யோவான் 17:11 – தனித்திருத்தல் அல்ல!
   சார்ந்திருத்தல்!!

6. **குறி தவறாமை** – 2 தீமோ.2:4 (நோக்கம் – 1கொரி.10:31)

7. **தைரியமாயிருத்தல்** – எபே.3:12
   2பேது.1:5

8. **எதிரியை அறிதல் / மதிப்பிடுதல்** – 1 பேது.5:8
   2 கொரி. 2:11

**9. தயாராயிருத்தல்** – மனதளவில் – 1பேதுரு **1:13**, ரோமர் **12:2**
– உடலளவில் – **1** கொரி. **9:27**
– யுத்தத்துக்கு – எபே. **6:11–18**

**10. கீழ்படிதல்** – அப்.**26:19** – தாமதிக்காமல்
– அப். **11:12**

**11. கடின உழைப்பு** – **2** தீமோ. **4:7** – நல்ல போராட்டம்
– **2** கொரி. **11:23** – நான் அதிகம்

**12. முன் முயற்சி** – யுத்த களத்தில் யோனத்தான் – **1** சாமு.**14:7**
– ரோமர். **15:21**

**13. தொடர் பயிற்சி** – (Wargame)
பிலி.**3:14** – வெற்றி நோக்கி
**2** தீமோ. **4:13**

**14. விழிப்புடனிருத்தல்** – எபே.**6:18**
**1** கொரி. **16:13**

**15. கடமை தவறாதிருத்தல்**
**1** கொரி.**9:16** – கடமை
**17** – உற்சாகமாய்
வாக்குத்தத்தம் – பயனுண்டு
**2**தீமோ. **4:8** – நீதியின் கிரீடம்
தளபதி : யோவான். **16 :33**

இவ்வித ~~குணங்~~களை கொண்ட படைவீரன்தான் போர்களத்தில் போர் புரியும்போது, எதிரியை துணிச்சலுடன எதிர்கொள்வான். போரிலும் வெற்றி பெறுவான்.

அதுபோல ஒவ்வொரு கிறிஸ்தவனும் இந்த உலகில் வாழும்போது பல ஆவிக்குரிய போராட்டங்களை சந்திக்கிறான். அவ்வித போராட்டங்களிலும் போர்களத்திலும் எதிரியை மேற்கொண்டு வெற்றிபெற கடமைப்பட்டவன். ஆவிக்குரிய போரில் வெற்றி பெற கிறிஸ்தவன் மேற்கண்ட குணங்களை வேத வசனத்தின் அடிப்படையில் தன்னில் வளர்த்துக் கொள்ள தொடர்ந்து முயலவேண்டும். தினமும் வேதவசனம் என்னும் ஆவிக்குரிய பட்டயத்தை பயன்படுத்த தவறக்கூடாது. கிறிஸ்தவ போர்வீரனுக்கு அவனது எதிரிகளான பிசாசு, உலகம், மாமிசம் இவற்றை எதிர்க்க தேவன் கொடுத்துள்ள சிறந்த பட்டயம் பரிசுத்த வேதாகமம் மட்டுமே.

அதை தினமும் பயன்படுத்தி பிசாசை ஜெயிப்போம்!

**–எச்.ஆர்.கே.**

**மலர்–2 இதழ்–2 ன் (மீகா–மல்கியா) விடைகளுக்கான வசன பகுதி**

1. மீகா. 4:10,
2. மீகா. 3:11 ஆசாரியர்கள்,
3. ஆபகூக். 1:6 கல்தேயர்,
4. ஆபகூக். 2:11 உத்திரம்,
5. செப்பனியா 1:1 காசுக்காரர்,
6. ஆகாய் 1:1 யோசுவா,
7. ஆகாய் 2:6,
8. சகரியா 3:1 சாத்தான்,
9. சகரியா 14:20 குதிரைகளின்,
10. மல்கியா 1:14 கபடஸ்தன்

# முன்னேற்ற பணியாளர்கள் தேவை

மிஷன் பணிக்களங்களில் பணியாற்றும் மிஷனரிகளுக்கு **புதுநம்பிக்கை** மிஷன் பல்வேறு வகைகளில் உதவி செய்து வருகிறது. மிஷனரிகளுக்கு உதவி செய்யும் மிஷனரி பணியில் ஆர்வமுள்ள தன்னார்வ முன்னேற்ற பணியாளர்கள் தேவை. தாங்கள் வாழ்ந்து வரும் பகுதியிலேயே இப்பணிகளை செய்யலாம். மிஷனரி பணியில் ஆர்வமுள்ள கிறிஸ்தவ சகோதரர் / சகோதரிகள் இப்பணிகளை ஜெபத்துடன் செய்யலாம். (நேரில் வர விரும்புவோர் முன் நேரம் குறித்து வரவும்)

எமது அலுவலக முகவரி:
**புது நம்பிக்கை மிஷன்**
75/33, ஐசக் தெரு, நாகர்கோவில் - 629 001.
தொடர்பு எண் : **9442935233**

## ஜெப மற்றும் குடும்ப ஆலோசனை

கிறிஸ்துவுக்குள் அன்பானவர்களே!

உங்கள் ஜெபத்தேவைகள் மற்றும் குடும்பம், வேதாகமம் குறித்த ஆலோசனைகளுக்கு எங்களை தொடர்பு கொள்ளவும். ஜெபித்து ஆலோசனை கூறி உதவ ஆயத்தமாயிருக்கிறோம்.

**தொடர்பு எண் : 9442935233**

எமது நிகழ்ச்சிகளை யு-டியூபில் பார்த்து ஆசீர்வாதம் பெறுங்கள்,
முகவரி: NEWHOPE MISSION

# அஞ்சல் வழி வேதாகம பயிற்சி

**வேதாகம கல்லூரி படிப்பு மையங்கள் :**
நாகர்கோவில், மார்த்தாண்டம், இரணியல், திருநெல்வேலி, கருங்கல், ஈரோடு, திருவண்ணாமலை, திருச்சி, பாண்டிச்சேரி.

இறையியல் மற்றும் வேதாகமத்தை முறைப்படி படிக்க ஓர் அரிய வாய்ப்பு. தேவனுடைய வார்த்தை தெளிவாக கற்று தேற உதவும் வகையில் கீழ்கண்ட பயிற்சிகள் நேரடி வகுப்பு மற்றும் அஞ்சல் வழியாக வழங்கப்பட்டு வருகிறது. ஆர்வமுள்ள அனைவரும் படிக்கலாம்.

| படிப்பு | காலம் | தகுதி |
|---|---|---|
| Bachelor of Theology | 3 ஆண்டுகள் | +2 தேர்ச்சி |
| Bachelor of Bible Studies | 2 ஆண்டுகள் | தமிழ் தெரிந்தவர்கள் |
| Master of Divinity | 2 ஆண்டுகள் | B.Th |
| Master of Ministry | 2 ஆண்டுகள் | B.B.S |
| Master of Theology | 2 ஆண்டுகள் | M.Div. |
| Diploma in Biblical Hebrew | 2 ஆண்டுகள் | தமிழ் தெரிந்தவர்கள் |

ஆர்வமுள்ள கிறிஸ்தவ ஆண் / பெண் இருபாலரும் படிக்கலாம். தமிழ் மற்றும் ஆங்கில வழியில் படிக்க வசதியுண்டு. குறைந்த கட்டணம் தரமான பயிற்சி.



மேலும் விபரங்களுக்கு:–
**Director**
**CALS - Bible Course**
Harris House,
8/69-c, Manvilagam,
Reethapuram P.O.
K.K.Dist - 629 159
Cell : 9442935233

ஆந்திரா மாநிலத்தில் குடாலா பணித்தளத்தில் கட்டப்பட்டு வரும் சபையின் தற்போதைய தோற்றம்




**Editor : S. Moses Raj, (Mobile : 7502071054),**
**Published by : New Hope Mission,**
**75/33, Isaac St. Nagercoil - 629 001.**
**Contact : 9442935233**
**e-mail: newhopebharat@gmail.com**
**website : www.newhopebharat.org**
**Youtube:- NEW HOPE MISSION**
Printed at : Latha Press, 9791659601

For Private Circulation Only